අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2015 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2015 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2015

ක්‍රිස්තියානි ශිෂ්ටාචාරය I
கிறிஸ்தவ நாகரிகம் I
Christian Civilization I

49 T I

පැය දෙකයි
இரண்டு மணித்தியாலம்
*Two hours*

**அறிவுறுத்தல்கள் :**

※ **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.

※ விடைத்தாளில் தரப்பட்டுள்ள இடத்தில் உமது **சுட்டெண்ணை** எழுதுக.

※ விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களைக் கவனமாக வாசித்துப் பின்பற்றுக.

※ **1** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் (1), (2), (3), (4), (5) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிந்தெடுத்து, **அதனைக் குறித்து நிற்கும் இலக்கத்தைத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கு அமைய** விடைத்தாளில் **புள்ளடி** (×) இடுவதன் மூலம் காட்டுக.

**1.** பபிலோன் என்னும் வார்த்தையின் பொருள்
(1) இளைப்பாறும் இடம் (2) திறந்த இடம் (3) பரலோகத்தின் வாசல்
(4) கல்தேயரின் நாடு (5) நுழைவாயில்

**2.** 'கலாசாரத்தின் தொட்டில்' என அழைக்கப்பட்ட நாடு
(1) எகிப்து (2) பபிலோன் (3) சீரியா
(4) கிரேக்கம் (5) மொசப்பத்தேமியா

**3.** யூதரின் திருவிழா **அல்லாதது**
(1) கடத்தல் விழா (2) இறந்தோரின் விழா (3) கூடாரத்திருவிழா
(4) பெந்தகோஸ்த்தே விழா (5) அர்ப்பண விழா

**4.** திருவிவிலியத்தில் 'பாலும் தேனும் ஓடும் நாடு' எனப் பெயர்பெற்ற நாடு எது ?
(1) எகிப்து (2) பேசியா (3) பலஸ்தீனா
(4) கானான் (5) யோர்தான்

**5.** பழைய இஸ்ரயேலரின் இறுதி நீதிபதி (நடுவர்)
(1) தானியேல் (2) சாம்ஸ்சன் (3) யோசுவா
(4) டிபோரா (5) சாமுவேல்

**6.** சாலமோன் அரசன் பிரபல்யம் பெற்றமைக்குக் காரணம்
(1) போர் தந்திரோபாயம் பற்றிக் கொண்டிருந்த அறிவு
(2) அவரிடம் காணப்பட்ட ஞானம்
(3) நிர்வாகத்திறமை
(4) நாட்டினை செழிப்புள்ளதாக மாற்றியமை
(5) அயல் நாடுகளுடன் கொண்டிருந்த நெருக்கமான தொடர்பு

**7.** மத்தேயுவின் 5 : 7 - 12 மலைப்பேறுகளில் **காணப்படாத** விடயம்
(1) இறை அரசு (2) தூய ஆவி (3) சமாதானம் (அமைதி)
(4) ஏழ்மை (5) துயரம்

**8.** யூத சமூகத்தில் உயர்ந்த வகுப்பினராகக் கருதப்பட்டோர்
(1) பெரிய குருக்களும் பரிசேயர்களும் (2) வரிவசூலிப்போரும் பரிசேயர்களும்
(3) சதுசேயர்களும் பரிசேயர்களும் (4) சதுசேயர்களும் பெரிய குருக்களும்
(5) சதுசேயர்களும் மறைநூல் வல்லுனரும்

**9.** இயேசுவின் காலத்தில் பாலஸ்தீன சமூகத்தில் தாழ்ந்த வகுப்பினராகக் கொள்ளப்பட்ட இரு பிரிவினர்
(1) சதுசேயரும் பரிசேயர்களும் (2) தலைமை குருக்களும் வரி வசூலிப்போரும்
(3) வரி வசூலிப்போரும் சமாரியர்களும் (4) சமாரியர்களும் இடையர்களும்
(5) இடையர்களும் தீவிரவாதிகளும்

**10.** பெண்கள் பற்றி இயேசுவின் காலத்தில் நிலவிய இக்கூற்றுகளைக் கருத்திற் கொள்க.

A - சமூகத்தில் பெண்கள் கௌரவமாக நடத்தப்பட்டார்கள்.
B - மனைவிக்குக் கணவன் மீது சட்டரீதியான அதிகாரம் இல்லை.
C - வழிபாடுகளின்போது பெண்களுக்கு முன்னுரிமை வழங்கப்பட்டது.
D - ஆண்களும் பெண்களும் ஒன்றாக உணவருந்த மாட்டார்கள்.
E - ஒரு யூத ஆண் பெண்களுடன் அதிகம் பேசக்கூடாது.

இவற்றுள் சரியானவை,

(1) A B D (2) A C D (3) B C D
(4) B D E (5) C D E

**11.** பாலைவனத் தந்தையர்களில் முதலானவர்

(1) அலெக்சாந்திரியா சிறில் (2) எகிப்து அந்தோனியார் (3) புனித அம்புரோஸ்
(4) புனித பசில் (5) புனித அகுஸ்தீனார்

**12.** இறைவாக்கினர் எலியாவின் ஏவுதலில் தோன்றிய ஆச்சிரம சபை

(1) ஆசிர்வாதப்பர் சபை (2) சிஸ்ரேசியன் சபை (3) அகுஸ்தீனார் சபை
(4) ரப்பிஸ்ற் சபை (5) கார்மேல் சபை

**13.** கிறிஸ்தவ ஆச்சிரம வாழ்வு ஆரம்பித்த முதல் இரண்டு நாடுகளும்

(1) எகிப்தும் இஸ்ரயேலும் (2) சிரியாவும் அலெக்சாந்திரியாவும்
(3) கிரேக்க நாடும் சைபிரசும் (4) எகிப்தும் சிரியாவும்
(5) சிரியாவும் பலஸ்தீனாவும்

**14.** பேதகம் என்றால்

(1) திருச்சபையின் போதனைக்கு எதிரான படிப்பினை
(2) திருச்சபையின் தலைவர்களுக்கிடையிலான கோட்பாடு தொடர்பான கருத்து முரண்பாடு
(3) விசுவாச உண்மைகளுக்கு எதிரான கற்பித்தல்
(4) கிறிஸ்தவத்திற்கு எதிரான கிளர்ச்சி
(5) வெவ்வேறு கிறிஸ்தவ சபைகளுக்கிடையிலான மாறுபட்ட கற்பித்தல்கள்



**15.** நொஸ்ரோறியஸ் அவர்கள் முன்வைத்த பேதகம் என்ன ?

(1) கிறிஸ்துவிற்கு மனித சுபாவம் மட்டுமே உண்டு.
(2) மனிதத்தன்மையும் இறைத்தன்மையும் கிறிஸ்துவில் வேறுவேறாக உள்ளன.
(3) கிறிஸ்து இறைவனால் படைக்கப்பட்டவர்.
(4) மரியா இறைவனின் தாய் அல்ல.
(5) கிறிஸ்துவின் இறைத்தன்மை மனிதத்தன்மையிலும் மேலானது.

**16.** கி.பி. 5ஆம் நூற்றாண்டில் முழுமையாகக் கிறிஸ்தவமாக மாறியிருந்த நாடு எது ?

(1) இங்கிலாந்து (2) பிரான்ஸ் (3) இத்தாலி
(4) இஸ்ரயேல் (5) ஸ்பெயின்

**17.** பின்வரும் விடயங்களைக் கருதுக.

A - உரோமைப் பேரரசில் அமைதியான சூழல் நிலவியமை
B - கொன்ஸ்ரன்ரயின் மன்னன் கிறிஸ்தவத்தைத் தழுவியமை
C - யூதர்கள் கிறிஸ்தவத்தை ஏற்றுக்கொள்ளாமை
D - கிறிஸ்தவர்கள் கலாபனைகளை எதிர்கொண்டமை
E - உரோமைப் பேரரசில் கிரேக்க மொழி பேசப்பட்டமை

மேலுள்ளவற்றுள் உரோமைப் பேரரசில் கிறிஸ்தவம் வேகமாகப் பரவியமைக்கான மூன்று காரணங்கள்

(1) A B C (2) A C B (3) A D E
(4) B C E (5) C D E

**18.** புனித ஆசீர்வாதப்பர் துறவிகளின் விருது வாக்கு

(1) 'கீழ்ப்படிவும் ஏழ்மையும்' (2) 'செபமும் ஏழ்மையும்'
(3) 'செபமும் வேலையும்' (4) 'வேலையும் கீழ்ப்படிவும்'
(5) 'மணத்துறவும் செபமும்'

**19.** இரவலர் சபைகள் ஆரம்பிக்கப்பட்டமை தொடர்பான பின்வரும் கூற்றுகளைக் கருதுக.

A - எல்லா இடங்களிலும் திருச்சபையைப் பரப்புதல்
B - கிறிஸ்துவின் ஏழ்மையைக் கடைப்பிடிப்பது
C - எல்லாவற்றையும் பொதுப் பொருளாய்க் கொள்வது
D - ஆன்மீக மதிப்பீடுகளைக் கடைப்பிடிப்பது
E - திருச்சபையின் அதிகாரிகளுக்குக் கீழ்ப்படிந்து வாழ்வது

மேலுள்ளவற்றுள் இரவலர் சபையானது ஆரம்பிக்கப்படுவதற்கான காரணங்கள் மூன்று

(1) A B C (2) A B D (3) A C D
(4) A C E (5) A D E

[பக். 3 ஐப் பார்க்க

**20.** முதல் இரவலர் சபையாகக் கருதப்படுவது
(1) பிரான்சிஸ்கன் சபை (2) வல்தேசியன் சபை (3) சாமிநாதர் சபை
(4) அகுஸ்தீனார் சபை (5) ஆசீர்வாதப்பர் சபை

**21.** மத்திய காலத்தில் ஏற்பட்ட திருச்சபையின் புதுப்பித்தலுக்கான காரணம்
(1) ஆன்மீக வாழ்வில் ஏற்பட்ட வீழ்ச்சி
(2) தேவ அழைத்தல் குறைவடைதல்
(3) சக்கரவர்த்திகள் திருச்சபையை ஆண்டமை
(4) புரட்டஸ்தாந்து சீர்திருத்தம் ஏற்பட்டமை
(5) பழைய வழிபாட்டு முறைகள் புதுப்பிக்கப்பட்டமை

**22.** சுவிங்கிலியுடன் தொடர்பான பின்வரும் கூற்றுகளைக் கருதுக.
A - திருவிவிலியம் மட்டும் விசுவாசத்தின் ஒரேயொரு அளவீடு
B - நாம் அருட்சாதனங்களால் அருளைப் பெறுவதில்லை; அவை அடையாளங்கள் மட்டுமே.
C - திருமுழுக்கும் உறுதிப்பூசுதலும் திருமணமும் மட்டுமே திருவருட்சாதனங்களாகக் கொள்ளப்பட முடியும்.
D - திவ்விய நற்கருணையில் கிறிஸ்துவின் உண்மைப் பிரசன்னம் இல்லை.
E - மீட்கப்பட வேண்டியோரை இறைவன் ஏற்கனவே தெரிந்துள்ளார்.

மேலுள்ளவற்றுள் சுவிங்கிலியின் பிரதான கற்பித்தல்கள்
(1) A B D (2) A B E (3) A C D
(4) B C D (5) B D E

**23.** மெதடிஸ்ட் திருச்சபையின் நிறுவுனர்
(1) 8ஆம் ஹென்றி (2) வில்லியம் கேரி (3) தோமஸ் முன்ஸ்ரர்
(4) உல்றிச் சுவிங்கிலி (5) யோண் வெஸ்லி

**24.** மறுசீரமைப்பு தொடர்பான பின்வரும் கூற்றுகளைக் கருத்திற் கொள்க.
A - மத்திய யுகத்தில் ஒருவருக்கு உரிமையினால் சலுகை கிடைத்தது.
B - கீழ்மட்டத்தில் பிறந்தவரும் மறுசீரமைப்பின் பயனால் உயர்நிலைக்கு வரச் சந்தர்ப்பம் கிடைத்தது.
C - மத்திய யுகத்தில் நடுத்தர வகுப்பைச் சேர்ந்த வியாபாரிக்கு வாழ்வில் முன்னேற முடியவில்லை.

மேலுள்ளவற்றில் சரியான கூற்று/கூற்றுகள்
(1) A மட்டும் (2) B மட்டும் (3) C மட்டும்
(4) A யும் B யும் மட்டும் (5) A யும் D யும் மட்டும்

**25.** திருச்சபையின் புதுப்பித்தல் தொடர்பாக பின்வரும் துறவற சபைகளைக் கருத்திற் கொள்க.
A - சாமிநாதர் சபை
B - இயேசு சபை
C - கப்புச்சின் பிரான்சிஸ்கன் சபை
D - அகுஸ்தீனார் சபை
E - வின்சென்சியன் சபை



மேலுள்ளவற்றுள் மத்திய காலத்தில் திருச்சபையின் புதுப்பித்தலுக்குப் பங்களிப்புச் செய்த மூன்று துறவற சபைகள்
(1) A B C (2) A B E (3) A C D
(4) B C D (5) B D E

**26.** பின்வருவோருள் டொமினிக்கன் சபையைச் **சாராத** இறையியலாளர்
(1) புனித பெரிய அல்பர்ட் (2) புனித தோமஸ் அக்குவினஸ்
(3) ஈவெஸ் கொங்கார் அடிகள் (4) லக்ராஞ்ஞ் அடிகள்
(5) புனித 7ஆம் கிறகோரியார்

**27.** சேர் ஐசாக் நியூற்றன் (1643 - 1727) தொடர்பான பின்வரும் கூற்றுகளுள் **பொருத்தமற்றது**
(1) "சூரிய கதிர்களில் நிறங்கள் உள்ளன" என்ற உண்மையை வெளிப்படுத்தினார்.
(2) சூரிய மண்டலம் பற்றிய தகவல்களை வெளியிட்டார்.
(3) பிரதிவிம்பம் காட்டும் தொலைநோக்குக் கருவியை கண்டுபிடித்தவர்.
(4) கடலில் ஏற்படும் ஏற்றம் இறக்கம் பற்றிய தகவலை வெளியிட்டார்.
(5) சார்பியற் கோட்பாட்டை அறிமுகப்படுத்தினார்.

**28.** ஆசியாவில் அதிக எண்ணிக்கையிலான கத்தோலிக்க மக்களைக் கொண்ட நாடு
(1) கொரியா (2) யப்பான் (3) பிலிப்பைன்ஸ்
(4) சீனா (5) இந்தியா

[பக். 4 ஐப் பார்க்க

**29.** இந்தியாவிலுள்ள கீழைத்தேச வழிபாட்டு மரபைக் கடைப்பிடிக்கும் இரண்டு கத்தோலிக்க சபைகள்
(1) சீரோ மலபார், ஜகோபைற்ஸ் திருச்சபைகள்
(2) சீரோ மலபார், சீரோ மலங்கார திருச்சபைகள்
(3) சீரோ மலங்கார, மாத்தோமா திருச்சபைகள்
(4) மாத்தோமா, வைதீக திருச்சபைகள்
(5) வைதீக திருச்சபை, சீரோ மலங்கார திருச்சபைகள்

**30.** இந்தியாவிற்கு முதன்முதலில் அறிமுகம் செய்யப்பட்ட சீர்திருத்த சபை
(1) அங்கிலிக்கன் சபை (2) மெதடிஸ்ட் சபை
(3) பப்ரிஸ்ற் சபை (4) பிறஸ்பிற்ரேறியன் சபை
(5) லூத்தரன் சபை

**31.** இலங்கையில் போர்த்துக்கேயர் காலத்தில் பணியாற்றிய மூன்று துறவற சபைகள்
(1) பிரான்சிஸ்கன் சபை, கார்மேல் சபை, அகுஸ்தீனார் சபை
(2) சாமிநாதர் சபை, இயேசு சபை, ஆசீர்வாதப்பர் சபை
(3) அகுஸ்தீனார் சபை, ஒரற்றோறியன் சபை, இயேசு சபை
(4) பிரான்சிஸ்கன் சபை, சாமிநாதர் சபை, இயேசு சபை
(5) அகுஸ்தீனார் சபை, இயேசு சபை, கார்மேல் சபை

**32.** புனித யோசப் வாஸ் இலங்கைக்கு வந்தமைக்கான காரணம்
(1) இலங்கையில் போதியளவு குருக்கள் இல்லாமை
(2) ஒல்லாந்து ஆட்சியாளர் கத்தோலிக்கரைத் துன்புறுத்தியமை
(3) போதனை செய்தலை அடிப்படையாகக் கொண்டு கத்தோலிக்கத்தைப் பரப்புதல்
(4) இலங்கையில் ஒரற்ரோறியன் சபையை நிறுவுதல்
(5) இவர் புகழ் அறிந்த இலங்கைக் கத்தோலிக்கர்களால் இலங்கைக்கு வருமாறு அழைப்பு விடுக்கப்பட்டமை

**33.** ஒல்லாந்தர் ஆட்சியின்போது கோவாவிலிருந்து இலங்கைக்கு மிசனறிமாரை அனுப்பிய சபை
(1) ஒரற்ரோறியன் சபை (2) பிரான்சிஸ்கன் சபை (3) அகுஸ்தீனார் சபை
(4) கார்மேல் சபை (5) இயேசு சபை

**34.** கீழ்க் குறிப்பிடப்பட்டுள்ளோரில் சமூக சேவையில் ஈடுபட்டு ஏழைகளுக்கு உதவியோர்
(1) எஸ். ஜி. பெரேரா அடிகள், பீற்றர்பிள்ளை அடிகள், சுவாமி ஞானப்பிரகாசர்
(2) ஆயர் லியோ நாணயக்கார, லக்ஸ்மன் விக்கிரமசிங்க, செல்வி. எல்லின் கன்னி
(3) ஆயர் லியோ நாணயக்கார, டபிள்யூ. எல். ஏ. டொன் பீற்றர் அடிகள், பீற்றர்பிள்ளை அடிகள்
(4) ஆயர் எட்மன் பீரிஸ், எஸ். தனிநாயகம் அடிகள், ஆயர் லக்ஸ்மன் விக்கிரமசிங்க
(5) பீற்றர்பிள்ளை அடிகள், எஸ். ஜி. பெரேரா அடிகள், செல்வி. எல்லின் கன்னி

**35.** பின்வரும பெயர்களைக் கருத்திற் கொள்க.
A - யாக்கோமே கொன்சால்வெஸ் அடிகள்
B - ஆயர் எட்மன் பீரிஸ்
C - மார்சலின் ஜெயக்கொடி அடிகள்
D - எஸ். தனிநாயகம் அடிகள்
E - டபிள்யூ. எல். ஏ. டொன் பீற்றர் அடிகள்

மேற்குறிப்பிடப்பட்டவர்களில் தேசிய கத்தோலிக்க இசையை முன்னேற்ற பங்களிப்புச் செய்தவர்களின் பெயர்களைக் குறிக்கும் எழுத்துகள்
(1) A யும் B யும் C யும் (2) A யும் B யும் D யும் (3) A யும் C யும் D யும்
(4) B யும் C யும் E யும் (5) C யும் D யும் E யும்

**36.** 'கொன்ஸ்தாந்தீனியப் போர்' என்னும் பெயரில் சிங்கள கவிதை நூலை வெளியிட்டவர்
(1) அழகியவண்ண முக்கவெட்டி (2) மார்சலின் ஜெயக்கொடி அடிகள்
(3) டப்ளியூ. எல். ஏ. டொன் பீற்றர் அடிகள் (4) யாக்கோமே கொன்சால்வெஸ் அடிகள்
(5) எஸ். ஜீ. பெரேரா அடிகள்

**37.** சிங்கள கிறிஸ்தவ இலக்கியத்தின் தந்தை என அழைக்கப்படுபவர்
(1) ஆயர் எட்மன் பீரிஸ் (2) அழகியவண்ண முக்கவெட்டி
(3) டபிள்யூ. எல். ஏ. டொன் பீற்றர் அடிகள் (4) யாக்கோமே கொன்சால்வெஸ் அடிகள்
(5) எஸ். ஜி. பெரேரா அடிகள்

**38.** தமிழ் கிறிஸ்தவ இலக்கியத்தின் தந்தை என அழைக்கப்படுபவர்
(1) எஸ். தனிநாயகம் அடிகள் (2) எச். எஸ். தாவீது அடிகள்
(3) ஹென்றிக் ஹென்றிக்கஸ் அடிகள் (4) சுவாமி ஞானப்பிரகாசர்
(5) யாக்கோமே கொன்சால்வெஸ் அடிகள்

[பக். 5 ஐப் பார்க்க

**39.** "சிங்கள 'நாடக' பாரம்பரியம் தோன்றி வளர்ச்சியடைவதற்கு தமிழ் 'நாட்டுக்கூத்து' வழிவகுத்தது" எனக் குறிப்பிட்ட இருவர்
(1) கலாநிதி ஈ. ஆர். சரத்சந்திர, சுவாமி ஞானப்பிரகாசர்
(2) ஆயர் எட்மன் பீரிஸ், சுவாமி ஞானப்பிரகாசர்
(3) டபிள்யூ. எல். ஏ. டொன் பீற்றர் அடிகள், சுவாமி ஞானப்பிரகாசர்
(4) கலாநிதி ஈ. ஆர். சரத்சந்திர, ஆயர் எட்மன் பீரிஸ்
(5) ஆயர் எட்மன் பீரிஸ், டபிள்யூ. எல். ஏ. டொன் பீற்றர் அடிகள்

**40.** 1841 இல் இலங்கையில் மத்திய பாடசாலை ஆணைக்குழுவொன்றை அமைத்தவர்
(1) ஆளுநர் ஸ்ருவட் மக்கன்ஸி (2) கிறிஸ்தோபர் போஞ்சின் அடிகள்
(3) வண. கிறிஸ்ரியன் டேவிட் (4) வண. மைரன் உவின்சிலோ
(5) ஆளுநர் தோமஸ் மெயிற்லாண்ட்

**41.** பின்வருவனவற்றுள் போர்த்துக்கேய பிரான்சிஸ்கன் மறைப் பணியாளர் பற்றிய **பொருத்தமற்ற** கூற்றுகளைத் தெரிவுசெய்க.
(1) இலங்கையில் மூன்று கல்லூரிகளை நிறுவினர்.
(2) இவர்களின் பாடசாலைகள் சமயக் கல்வியை மையமாகக் கொண்டு நிறுவப்பட்டவை.
(3) கத்தோலிக்கரின் எண்ணிக்கைக்கேற்ப பாடசாலைகள் அமைக்கப்படவில்லை.
(4) இடைநிலைப் பாடசாலைகள் இவர்களால் அமைக்கப்படவில்லை.
(5) சுதேச மக்களின் மொழியைக் கற்பதில் ஆர்வம் காட்டவில்லை.

**42.** "கொடிய தொற்றுநோய் நிலவியபோதும் எங்கள் மறை பணியாளர்கள் மனித நேயப் பணிகளில் ஈடுபட்டனர்" எனக் கூறியவர்
(1) வண. வில்லி விக்கிரமசிங்க (2) வண. ஆர். எஸ். டி. சேரம்
(3) ஆயர் யூஜின் டீ மசனட் (4) ஆயர் லியோ நாணாயக்கார
(5) ஆயர் பிராங் மார்க்கஸ்

**43.** 2ஆம் வத்திக்கான் சங்கம் பற்றிய **பொருத்தமற்ற** கூற்றைத் தெரிவுசெய்க.
(1) கார்ள் றாணர், ஈவெஸ் கொங்கார் ஆகியோர் பொது நிலையினருக்கு வழங்க வேண்டிய சிறப்பிடத்தை வலியுறுத்தினர்.
(2) XXIII ஆம் அருளப்பர் திருத்தந்தையால் இரண்டாம் வத்திக்கான் பொதுச் சங்கம் ஆரம்பிக்கப்பட்டது.
(3) திருச்சபைக்கும் உலகிற்கும் இடையில் உரையாடலொன்று காணப்பட வேண்டியதன் முக்கியத்துவம் வலியுறுத்தப்பட்டது.
(4) இப் பொதுச்சங்கத்தில் கலந்துகொண்ட திருச்சபைத் தந்தையர்களால் மறைக்கோட்பாடுகள் வலியுறுத்தப்பட்டதுடன் தப்பறைகள் கண்டனம்செய்யப்பட்டன.
(5) இத் திருச்சபையின் மூலம் குருக்கள், பொது நிலையினர் மத்தியிலுள்ள இடைவெளியைக் குறைப்பதற்கு வழிவகுக்கப்பட்டது.

**44.** இரண்டாம் வத்திக்கான் பொதுச் சங்கத்தின் இன்றைய உலகில் திருச்சபை என்னும் கோட்பாட்டு ஏட்டை உருவாக்குவதற்கு சங்கத் தந்தையருக்கு உணர்த்தியவர்
(1) பிரேசில் நாட்டு துணை ஆயர் ஹெரால்டர் கமாரா
(2) இறையியலாளர் கான்ஸ் குங்
(3) இறையியலாளர் ஈவெஸ் கொங்கார்
(4) திருத்தந்தை XXIII ஆம் அருளப்பர்
(5) திருத்தந்தை VI ஆம் சின்னப்பர்

**45.** "துறவற சபைகளில் காணப்படும் விசுவாசக் குறைவே சபையில் பிரிவினை தோன்றக் காரணமாகும்" எனக் கூறியவர்
(1) புனித சிலுவை அருளப்பர் (2) சேல்ஸ் புனித பிரான்சிஸ்
(3) புனித பீற்றர் கன்சியஸ் (4) புனித அவிலா திரேசாள்
(5) புனித பிலிப் நேரி

**46.** ஆசிய ஆயர்கள் பேரவை (FABC) எத்தனை நாட்டு ஆயர்களால் பிரதிநிதித்துவப் படுத்தப்படுகின்றது ?
(1) 13 (2) 14 (3) 15 (4) 19 (5) 21

**47.** திருச்சபைக்குள் ஒருமைப்பாட்டை ஏற்படுத்த 'உலக கிறிஸ்தவ சம்மேளனத்தின் செயற்பாடுகள்' எத்தனை திணைக்களங்களாகச் செயற்படுகின்றன ?
(1) 13 (2) 14 (3) 15 (4) 19 (5) 21

[பக். 6 ஐப் பார்க்க

**48.** ஆசிய கிறிஸ்தவ சம்மேளனம் 1957 இல் முதன்முதலில் கூட்டப்பட்ட இடம்
(1) ஜப்பான் (2) கொரியா (3) இந்தோனேசியா
(4) பிலிப்பைன்ஸ் (5) இலங்கை

**49.** 1969 இல் புதிய கல்வித்துறை மசோதா அறிமுகப்படுத்தப்பட்ட பின், பின்வரும் இடங்கள் சிலவற்றில் ஆசிரியர் பயிற்சிக் கலாசாலைகள் அமைக்கப்பட்டன.

A - மக்கோனா
B - போலவலான
C - கொழும்புத்துறை
D - பலாலி
E - மஹரகம

மேற்குறிப்பிடப்பட்டவற்றுள் ஆசிரியர் பயிற்சிக் கலாசாலைகள் அமைக்கப்பட்ட சரியான இடங்கள்
(1) A B C (2) A B D (3) A C D
(4) A C E (5) A D E

**50.** கொழும்பு மறைமாவட்டத்திலுள்ள அக்குவையினஸ் கல்லூரியை ஆரம்பித்தவர்
(1) டபிள்யூ. எல். ஏ. டொன் பீற்றர் அடிகள்
(2) கிறிஸ்ரோப்பர் போஞ்சின் அடிகள்
(3) பீற்றர்பிள்ளை அடிகள்
(4) ஆயர் எட்மன் பீரிஸ்
(5) எஸ். ஜி. பெரேரா அடிகள்

* * *

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2015 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2015 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2015

ක්‍රිස්තියානි ශිෂ්ටාචාරය II
கிறிஸ்தவ நாகரிகம் II
Christian Civilization II

49 T II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

**அறிவுறுத்தல்கள் :**

* பகுதி I இல் எவையேனும் **இரண்டு** வினாக்களையும் பகுதி II இல் எவையேனும் **மூன்று** வினாக்களையும் தெரிவுசெய்து, எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு விடை எழுதுக.
* ஒவ்வொரு வினாவுக்கும் **20** புள்ளிகள் உரித்தாகும்.

## பகுதி I

**1.** (i) அலெக்சாந்திரியா, அந்தியோக்கியா கல்லூரிகளின் படிப்பினைகள் **இரண்டு** வீதம் எழுதுக.

(ii) ஆரம்பத் திருச்சபையின் தந்தையர்கள் **நால்வரைப்** பெயரிடுக.

(iii) மத்திய காலத்தில் கல்வி முன்னேற்றத்திற்குத் திருச்சபை ஆற்றியுள்ள **நான்கு** பங்களிப்புகளைக் குறிப்பிடுக.

(iv) விஞ்ஞானத்தின் முன்னேற்றத்திற்குப் பங்களிப்புச் செய்த **நான்கு** கிறிஸ்தவ விஞ்ஞானிகளின் பெயர்களை எழுதுக.

(v) கல்வி, தொழில்சார் சேவைகளின் முன்னேற்றத்திற்கு இலங்கைத் திருச்சபை பங்களித்துள்ள விதங்கள் **நான்கினைக்** குறிப்பிடுக.

**2.** (i) ஆசிய ஆயர் பேரவையின் உறுப்பினர்களாகப் பங்குகொள்ளும் **நான்கு** நாடுகளைப் பெயரிடுக.

(ii) இலங்கைத் தேசிய கிறிஸ்தவ சபைகளின் சம்மேளனத்தில் அங்கம் வகிக்கும் **நான்கு** திருச்சபைகளைப் பெயரிடுக.

(iii) ஆரம்பக் கிறிஸ்தவர்களின் சமூக வாழ்வியல்களில் காணப்பட்ட **நான்கு** பண்புகளைக் குறிப்பிடுக.

(iv) 4ஆம் நூற்றாண்டிலிருந்து உரோமையப் பேரரசில் கிறிஸ்தவம் பரவ ஏதுவான **நான்கு** காரணிகளைக் குறிப்பிடுக.

(v) "கிறிஸ்துவின் இரண்டாம் வருகை வெகுவிரைவில் நிகழவிருக்கின்றது" என்னும் எதிர்பார்ப்பு ஆரம்பத் திருச்சபையினரின் வாழ்வில் செல்வாக்குச் செலுத்திய **நான்கு** விடயங்களைக் குறிப்பிடுக.

**3.** (i) புனித இஞ்ஞாசியார் தமது 'ஆன்மீகப் பயிற்சிகள்' (Spiritual Exercises) என்னும் நூலை எழுதுவதற்கு உதவியாயமைந்த **நான்கு** நூல்களைப் பெயரிடுக.

(ii) புனித சிலுவை அருளப்பர் ஆன்மீக வாழ்வு பற்றி எழுதிய **நான்கு** நூல்களின் பெயர்களைக் குறிப்பிடுக.

(iii) புரட்டஸ்தாந்து சீர்திருத்தத்தின் பின் இயேசு சபையினர் கத்தோலிக்க மறையை அறிமுகம் செய்த **நான்கு** நாடுகளைக் குறிப்பிடுக.

(iv) புரட்டஸ்தாந்து சீர்திருத்தத்தின் காரணமாக கத்தோலிக்க திருச்சபை அடைந்த **நான்கு** நன்மைகளைக் குறிப்பிடுக.

(v) 'மொசேயிக்கலை'யின் **நான்கு** பண்புகளைக் குறிப்பிடுக.

## பகுதி II

**4.** உலக நாகரிகமும் கிறிஸ்தவ நாகரிகமும் ஒன்றின் முன்னேற்றத்திற்கு மற்றையது பங்களிப்புச் செய்துள்ளன.

(i) நைல்நதி நாகரிகம் பற்றி விளக்குக.

(ii) பலஸ்தீனத்திற்கு அண்மையிலுள்ள நாடுகளில் அக்காலத்தில் காணப்பட்ட நாகரிகங்கள், யூத நாகரிகத்தின் முன்னேற்றத்தில் ஏற்படுத்தியுள்ள செல்வாக்கினை விளக்குக.

(iii) கிறிஸ்தவத்தின் ஆரம்பத்தால் எவ்வாறு புதிய சமூகம் உருவாக்கப்பட்டது என்பதனை விபரிக்குக.

(iv) ஐரோப்பிய நாகரிகத்தின் வளர்ச்சிக்குத் திருச்சபை எவ்வாறு பங்களிப்புச் செய்துள்ளது என்பதனை விளக்குக.

[பக். 2 ஐப் பார்க்க

5. திருச்சபையின் ஆன்மீக, சமூக விருத்திக்கு ஆச்சிரம, துறவற சபைகள் பெரிதும் உதவியுள்ளன.
   (i) ஆச்சிரம வாழ்வின் ஆரம்பம் பற்றி விபரிக்குக.
   (ii) வேலை மட்டில் ஆசீர்வாதப்பர் சபைத் துறவிகளின் மனப்பாங்கை விளக்குக.
   (iii) இரவலர் சபைகளின் தோற்றத்துக்கு அடிப்படையாக அமைந்த பின்புலத்தை விபரிக்குக.
   (iv) ஐரோப்பாவில் கல்வி வளர்ச்சிக்கு ஆச்சிரம, துறவற சபைகளின் பங்களிப்பை விளக்குக.

6. ஆரம்பம் முதல் திருச்சபை நலன்புரி, மனித நேயப் பணிகளில் ஈடுபட்டு வந்துள்ளது.
   (i) ஆரம்ப காலத்தில் திருச்சபை மனித நேயப் பணிகளில் ஈடுபட்ட விதத்தினை விபரிக்குக.
   (ii) திருத்தெந்து சங்கத்தின் பின் ஆரம்பிக்கப்பட்ட துறவற சபைகள் மனித நேயப் பணிகளிலும் நலன்புரிப் பணிகளிலும் ஈடுபட்ட விதத்தினை விளக்குக.
   (iii) இலங்கையில் பணியாற்றிய மிசனறிமார் மனித நேயப் பணிகளில் எவ்வாறு ஈடுபட்டனர் என்பதை விளக்குக.
   (iv) இன்றைய இலங்கைக் கத்தோலிக்க திருச்சபை நாட்டின் சமூக, நலன்புரிச் செயற்பாடுகளில் பங்களித்துள்ள விதத்தை விபரிக்குக.

7. திருச்சபை கல்வி மட்டில் தனது விசேட கரிசனையைக் காட்டியுள்ளதுடன் அதற்காக கூடிய பங்களிப்பையும் நல்கியுள்ளது.
   (i) 1960 இல் பாடசாலைகள் அரசுடைமையாக்கப்பட்டமையினால் ஏற்பட்ட சாதகமான, பாதகமான விளைவுகளை விபரிக்குக.
   (ii) இலங்கையின் கல்விக்கு இன்றைய திருச்சபை ஆற்றியுள்ள பணிகளை விளக்குக.
   (iii) மத்திய கால ஐரோப்பிய கட்டடக்கலைக்கு திருச்சபை ஆற்றியுள்ள பங்களிப்பை விபரிக்குக.
   (iv) ஆயர் கிறிஸ்தோப்பர் போஞ்சின் பற்றிச் சுருக்கமாகக் குறிப்பிட்டு, அவர் இலங்கையின் கல்வி வளர்ச்சிக்கு ஆற்றிய பங்களிப்புப் பற்றியும் விபரிக்குக.

8. திருச்சபை கிறிஸ்தவ சபைகளுக்கிடையிலான ஒற்றுமையையும் ஏனைய சமயங்களுடனான உரையாடலையும் வலியுறுத்துகின்றது.
   (i) "கிறிஸ்தவ சபைகளுக்கிடையே நிலவிய குரோதப் போக்கு 20ஆம் நூற்றாண்டிலிருந்து படிப்படியாக குறைய ஆரம்பித்தது." இதற்கான காரணங்களைக் குறிப்பிடுக.
   (ii) கிறிஸ்தவ சபைகளுக்கிடையே ஒற்றுமையை ஏற்படுத்த எவ்வாறான விவிலிய, வரலாற்று ஆதாரங்களை முன்வைக்கலாம் என்பதனை விளக்குக.
   (iii) கிறிஸ்தவர் என்னும் வகையில் இலங்கையிலுள்ள பல்வேறு இனங்கள் மத்தியில் ஒற்றுமையை ஏற்படுத்துவதற்கான உமது பரிந்துரைகளை முன்வைக்குக.
   (iv) இலங்கையிலுள்ள பல்வேறு மதங்களுக்கிடையில் எவ்வாறு புரிந்துணர்வை ஏற்படுத்தலாம் என்பதனை விபரிக்குக.

❊ ❊ ❊